மற்ற அரசியல் கட்சிகளைத் தாக்குவது முறையா ? பொதுக் கூட்டங்களில் கலந்துக் கொண்டு மற்ற கட்சிகளை தாக்குவதற்குப் பிரயாணப் படி வாங்குவதாக இருப்பதால், அப்படிச் செய்வது முறையா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது சர்க்கார் சில கொள்கைகளை நிறைவேற்ற முயற்சிக்கிறது. அப்படி கொள்கைகளை நிறைவேற்ற, பொது மக்கள் ஆதரவு வேண்டியிருக்கிறது. அப்பொழுதுதான் அவற்றை நிறைவேற்ற முடியும். அப்படி சர்க்கார் கொள்கைகளுக்கு எதிராகப் பிரசாரம் நடந்தால், எங்கள் கொள்கைகளை எடுத்து மக்களுக்குச் சொல்லி, எதிரி வாதங்களுக்குப் பதில் சொல்ல வேண்டியது மந்திரிகளின் பொறுப்பு. அப்படிச் செய்யாவிட்டால், சர்க்கார் பொறுப்புகளைச் சரிவர நிறைவேற்றியதாகாது.

SRI A. MARIAPPAN : இப்பொழுது எஸ்டிமேட் கமிட்டி போன்ற கமிட்டிகளில் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது, அங்கத்தினர்கள் கட்சிக் கூட்டங்களுக்கும் போகிறார்களே, அந்த சமயத்தில் படி வாங்குகிறார்களே, அது சரியா ?

MR. SPEAKER : The question is out of order.

SRI C. NATARAJAN : தலைவர் அவர்களே, அமைச்சரவர்கள் சர்க்கார் படியில் போய், வெளியில் மற்றக் காரியங்களில் கலந்துக்கொள்ள வில்லை என்று சொன்னார்கள். இப்பொழுது, முதல் அமைச்சர் அவர்கள் காலையில் பொதுக்காரியத்தில் ஈடுபட்டு, பிறகு காங்கிரஸ் கட்சிக் கூட்டமும், ரகசியமாக ஊழியர்கள் கூட்டமும் கூட்டிப் பேசுகிறார்களே, அது சரியா ?

MR. SPEAKER : போகவில்லை என்று சொல்ல வில்லையே.

THE HON. SRI C. SUBRAMANIAM : I will again read for the benefit of the hon. Member. If party work is combined with official tours, no travelling allowance is claimed for the journey and halt involved in such party work.

*Electric pump-sets*

* 438—SRI N. R. THIAGARAJAN : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் மதுரை ஜில்லாவில் 1,725 மின்சார பம்பு செட்டுகள் "ஹையர் பர்ச்சேஸ்" திட்டத்தில் கொடுப்பதாக திட்டமிட்டபடி கொடுக்கப்பட்டதா ?

(ஆ) இவை எந்தெந்த பிளாக்கில் எத்தனை கொடுக்கப்பட்டன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) & (b) The information is being collected and will be placed on the table of the House.

*Assignment of lands to the poor*

* 439 Q.—SRI. S. M. ANNAMALAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) காட்டு இலாகாவுக்குச் சொந்தமான நிலங்கள் காடுகளுக்குத் தகுதியற்றதென்று நிலமில்லா ஏழைகளுக்கு மாவட்டங்கள் வாரியாக எவ்வளவு நிலம் பட்டா செய்யப்பட்டது ?

(ஆ) வட ஆற்காடு மாவட்டத்தில் போளூர் தாலூகாவில் எவ்வளவு நிலம் பட்டா செய்யப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) There are no lands under forests, which are not fit to be maintained as forests. In the past two years, an extent of 20 acres only in Suryamalai